[9th August 1960

*Maniyamkaram-Thiruppuvaram*

* 50 *Q*.—SRI K. SATTANATHA KARAYALAR: Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the extent of lands in Shencottah taluk that come under the (i) Maniyamkaram and (ii) Thiruppuvaram;

(*b*) whether there is a proposal to abolish these categories; and

(*c*) if so, when a legislation to this effect will be introduced?

THE HON. SRI M. A. MANICKAVELU: (*a*) Sri Padmanabhaswami temple at Trivandrum has two kinds of income, namely—

(i) the rent payable by the tenants of Sripandaravagai lands, i.e., lands held on favourable terms by the temple, and

(ii) Thiruppuvaram payable by the holders of lands of different tenures. The term "Maniyamkaram" refers to both these kinds of income. There are no Sripandaravagai lands in Shencottah taluk. Thiruppuvaram is payable on 371·12 acres of wet land and 5·48 acres of dry land in the taluk.

(*b*) Yes.

(*c*) The matter is under correspondence with the Kerala Government.

**SRI K. SATTANATHA KARAYALAR:** ஸார், திருப்புவாரம், மேல்வாரம், மணியம்கரம் ஆகிய இந்த நிலங்கள் எவ்வளவு இருக்கின்றன என்பது வரையறை செய்யப்பட்டு திட்டவட்டமாகத் தெரியுமா? ஒரு நிலத்தை சொந்தக்காரர் 10 அல்லது 15 ஆண்டுகள் வைத்திருந்த பிறகு, திடீரென்று திருப்புவாரம் கொடுக்க வேண்டும் என்று கோர்ட் தீர்ப்புக் கொடுத்து, 10 அல்லது 15 ஆண்டுகளுக்கும் சேர்த்து பணம் கட்டவேண்டிய நிலை ஏற்படுகிறது. இந்த மாதிரி நிலை ஏற்படாமல், இருக்கக்கூடிய தஸ்தாவேஜுகளையெல்லாம் பார்த்து இந்த வட்டாரத்தில் இவ்வளவு நிலம் இருக்கிறது என்று வரையறை செய்யப்பட்டிருக்கிறதா? இல்லையானால் அம்மாதிரி வரையறை செய்ய நடைமுறையில் ஏதாவது நடவடிக்கை எடுக்கப்படுமா?

**THE HON. SRI M. A. MANICKAVELU:** கனம் அங்கத்தினர் அவர்கள் செங்கோட்டை தாலுக்காவைப் பற்றி தகவல் கேட்டிருக்கிறார். தகவல் கொடுத்தேன். மற்ற இடங்களிலும் எவ்வளவு இருக்கிறது என்று கேரள சர்க்காரைக் கேட்டிருக்கிறோம். ஏனென்றால் அந்தத் தகவல் அவர்களிடத்தில் தான் இருக்கும். அது வந்த பிறகு பரிசிலனை செய்து எப்படி மாற்றுவது என்று பார்க்கலாம்.

SRI A. NESAMONY: Sir, are the Government aware that a Bill called the Special Rights in Land Abolition Bill was introduced in the Travancore-Cochin Assembly with the consent of His Highness the Maharajah and that it was subsequently dropped as these dues were common only in the transferred territory?

9th August 1960]

THE HON. SRI M. A. MANICKAVELU : I have asked the Kerala Government to furnish the details regarding this matter.

**SRI K. SATTANATHA KARAYALAR:** ஸார், இதைக் கவனிப்பதற்கு உத்தியோகஸ்தர்களும், உத்தியோகப் பற்றற்றவர்களும் அடங்கிய கமிட்டி அமைத்து குறிப்பிட்ட காலத்திற்குள்ளாக நிலைமை என்ன என்பதை பற்றிய அறிக்கையை வெளியிட சர்க்கார் உத்திரவு பிறப்பிக்குமா ?

**THE HON. SRI M. A. MANICKAVELU:** இதைப் பற்றி முன்னால் அங்கு கலெக்டராக இருந்தவர் ரிப்போர்ட் செய்திருக்கிறார். அதிலிருந்து சில விஷயங்கள் நமக்குத் தெரிய வேண்டியிருந்தது. அதற்காகப் பக்கத்து அரசாங்கத்திற்கு எழுதியிருக்கிறோம். அதெல்லாம் வந்த பிறகு அவசியமிருந்தால் செய்கிறோம்.

SRI A. NESAMONY : Are the Government aware that on payment of 16-2/3 of the capitalised value of the rent. the then Government were prepared to enfranchise the lands in favour of the tenants?

THE HON. SRI M. A. MANICKAVELU : Probably the other Government were prepared and I am not aware of it. I want to look into the matter.

*Slum clearence scheme in Madurai district*

**MR. SPEAKER:** கனம் அங்கத்தினர் ஸ்ரீ தியாகராஜன் அவர்கள் சபையில் இல்லாததால் கேள்வியும் பதிலும் சபை நடவடிக்கைகளில் பிரசுரிக்கப்படும்.

***51 *Q*.—SRI N. R. THIAGARAJAN:** கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிளிப்பாரா—

*(அ)* மதுரை ஜில்லாவுக்குரிய இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தில், சேரி சுத்தப்படுத்தும் திட்டம் கீழ்க்கண்ட மேஜர் பஞ்சாயத்துக்களில் அமுல் செய்யப்பட்டதா—

1. அம்மையநாயக்கனூர்.
2. அல்லிநகரம்.
3. உசிலம்பட்டி.
4. **மேலூர்**.
5. கீரனூர்.
6. உத்தமபாளையம்.
7. கம்பம்.

*(ஆ)* அதற்கு செலவான தொகை எவ்வளவு ?

THE HON. SRI R. VENKATARAMAN : *(அ)* The Slum Clearance Scheme has not been extended to the Major Panchayats in the State.

*(ஆ)* Does not arise.